உ

சிவமயம்.

# "துறவி"

1956

மன்மத
மலர் 2

## திங்கள் வெளியீடு.

பங்குனி
இதழ் 3




**தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,**
திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர் :

சுவாமி சொரூபானந்தா

ஆண்டுக் கட்டணம் ரூ 2/-    தனி இதழ் அணா 3/-

ஓம்.

# "துறவி"

## பொருளடக்கம்.





---

## "துறவி"

### நன்கொடையாளர்கள்.



சென்னை தவத்திரு சுவாமி அருணகிரிநாதர் அவர்கள் ரூ 100-0-0

,, திருவுயர். K. V. தேவர் அவர்கள் ,, 75-0-0

நமது துறவி இதழின் நன்மை கருதிப் பொருளீந்த அடிகளாரவர்கட்கும், அன்பர் அவர்கட்கும் நமது வணக்கமும் நன்றியும் உரியது.

ஓம்.

# "துறவி"


| மன்மத மலர் 2. | தமிழ் திங்கள் வெளியீடு. | பங்குனி இதழ் 3 |
|---|---|---|


### கடவுள் வாழ்த்து.

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே
வண்டுலா மலர்ச் செஞ்சடை யேகம்பன்
றெண்டனாய்த் திரியாய் துயர் தீரவே.

பொருளி னேடுநற் சுற்றமும் பற்றிலர்க்
கருளு நன்மைதந் தாய வரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்ப
மிருள்கெடச் சென்று கைதொழு தேத்துமே

—நாவுக்கரசர்.

## உலகம் உண்டு.

எல்லா உயிர்களும் இன்புறவேண்டும் என்ற பரந்த நோக்கினை யுடைய பண்புடையாளன் உண்மையான் உலகம் உண்டு. கிடைத்தற் கரிய அமிழ்தம் கிடைத்ததாயினும் தனித்துண்ணாமல் பகுத்துண்டு பல்லுயிரோம்பும் பண்புடையான் உண்மையான் உலகம் உண்டு. உலகிற்குத் தொண்டு புரிதலில் வெறுப்பு இல்லாத விழுமியோர் உண்மையான் உலகம் உணடு. ஆக்கத்திற்கு அழகு தரும் ஊக்கம் உடையார் உண்மையான் உலகம் உண்டு. மேலோர்கள் அஞ்சுவதற்கு அஞ்சும் ஆன்றோர் உண்மையான் உலகம் உண்டு, புகழ் என்னின் உயிரையும் விடும் உயர்ந்தோர் உண்மையான் உலகம் உண்டு. பழி யெனினே எத்துணை ஏற்றம் உறுவது எனினும் கொள்ளாத பெரியோர் உண்மையான் உலகம் உண்டு. எவ்வித நலனையும் தாமே எய்தல் வேண்டும் என்ற குறுகிய நோக்கில்லாதார் உண்மையான் உலகம் உண்டு. இத்தகைய பண்புள்ள பெரியோர்கள் தோன்றி வளர்ந்து வாழும் உலகே உலகு, நாடே நாடு. மாட மாளிகை கூட கோபுரங்கள் ஏனைய பொருள்களால் நிறைந்த அளவிலேயே ஒரு நாடு நன்னாடாகாது. ஒருலகு உயரிய உலகாகாது.

"எவ்வழி நல்லவ ராடவர், அவ்வழி நல்லைநீ வாழிய நிலனே" புறநானூறு.

அருளும் அன்பும் ஆருயிரோம்பும் ஒருபெரும் கொள்கையும் உடையராய் ஒவ்வொருவரும் ஒளிர்தல் வேண்டும்.

உலகம் உயரிய நிலையினை யடைய வேண்டுமேல் நிலவுலகாளும் திருவுடை மன்னர்கள் சீரியோராதல் வேண்டும். மன்னர்களால் மாதவர் நோன்பும் மடவார்கற்பும், மன்னுதல் வேண்டும்.

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவல் இன் றெனின்றும்"

மலர்தலையுலகம் மன்னன் உயிர்த்தாக உள்ளது.

"இளம்பெருவழுதி" என்னும் பாண்டிய மன்னன், புவி மன்னனுகவும், கவிமன்னனுகவும் இருந்தான் அவனது உள்ளநிலை கவிவடிவமாக அடுத்துவருகின்றது காண்பாம்.

"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.

—புறநானூறு—182.

முற்றும்.

## குறிப்பு.

"துறவி" என்னும் திங்களிதழில் வெளியிட கட்டுரை எழுதியனுப்பும் துறவிகள் நல்ல கடிதத்தில் தொடர்பு எழுத்தில்லாமல் எழுத்துக்களை நன்கு தெரிந்து கொள்ளும்படி தனித்தனியாக ஒவ்வொரு கடிதத்திலும் ஒரேபக்கத்தில் எழுதி ஒவ்வொறு தமிழ் மாதம் 15உக்குள் அனுப்பிவைக்கும்படி வேண்டுகின்றோம்.

[அண்மையில் குடந்தை என்னும் கும்பகோணத்தில் நடைபெற்ற மகாமகத்திருவிழாவுக்குச்சென்று தெரிசிக்கும் வாய்ப்பில்லாதவர்கட்கும் சென்று வந்தவர்களிலும் விவரந்தெரியாதவர்கட்கும் பயனாக இஃது எழுதப்பெறுகிறது.]

# குடந்தை மகாமகப் பெருவிழா.

(மன்றிறை அடிகளார், தில்லை.)

செந்தமிழ் நாட்டிலுள்ள பல்வேறு திருத்தலங்களில் மாசிமகத்திலே மகோற்சவம் நடைபெறுகின்றன. அவை விருத்தாசலம், வேதாரணியம், திருவோற்றியூர், திருத்தணி, (பாவநாசத்திற்கடுத்த) திருநல்லூர், திருப்புறம்பயம் முதலியனவும் மற்றும்பலதலங்களுமாம். அவைகளில் கும்பகோணமும ஒன்று

## ஊரின் பெயர்க் காரணம்.

பிரமதேவருடைய தினகற்பம் வந்தபோது உலகமுழுதும் தண்ணீரால் விழுங்கப்பட்டு வெள்ளமாகியது. அப்பொழுது பிரமதேவர் அமுதத்தால் மண்ணைக் குழைத்து ஒரு குடம் உண்டாக்கி அதனுள் அமுதத்தை நிறைத்து அதனுள் சிருட்டி பீஜத்தைவைத்து அதன் நாற்புறத்தும் சூழ வேதம், ஆகமம், அங்கம், புராணம், இதிகாசம் முதலியவற்றையும் வைத்து குடத்தின் வாயிலே தேங்காய் மாவிலையும் வைத்துப் பூணூல்சாத்தி மேருவின் ஒரு பாகத்திலே உறியிலே வைத்துத் தருப்பை முடிச்சும் சேர்த்து வைத்தனர். பின்பு வெள்ளம் மிகுந்து அமுதகும்பம் மிதந்து தென்றிசையை அடைந்தது.

இறைவன் வேடவுருத்தாங்கி ஈசான திசையில் நின்று ஓர் அம்பு விட்டனர் அது குடத்தின் மூக்கைச் சிதைத்துக் கவிழ்த்தது. மூக்கு விழுந்த இடமே குடவாயில் என்னும் பெயருடன் விளங்குவதாயிற்று. அம்பு தொடுத்த இடமே இன்றும் பாணபுரம் என்னும் பேருடன் விளங்குகின்றது. குடத்தின் மூக்கைச் சிதைத்துக் கவிழ்த்த காரணத்தால் குடமூக்கென்னும் பெயர் வழங்குவதாயிற்று. இத்தலம் தேவாரத்தில் குடமூக்கு என்றே பாராட்டப்படுகிறது. குடமூக்கு என்னும் பெயரின் மருஉ மொழியே குடந்தை என்பதாம். கும்பம்—குடம் கோணம்—மூக்கு.

## மகா மக தீர்த்தம்.

இறைவன் அம்பினால் எய்த அமிர்த குடத்தினின்றும் வழிந்த அவ்வமிர்தம் இருகூறாகி ஒன்று மகாமக தீர்த்தமும், மற்றொன்று பொற்றாமரைப் புட்கரணியும் ஆயிற்று. மகா மக நாளில் சுவாமி தீர்த்தம் கொண்டருளுங் காரணத்தால் மகா மக தீர்த்தம் என்பது பெயராயிற்று. இத்தீர்த்தத்தில் ஒவ்வொரு வருடமும் மாசிமகத்தில் தீர்த்த விசேடம் நடைபெறுவதுண்டு.

வடநாட்டில் அரித்துவாரம், பிரயாகை, நாஸிக் பஞ்சவடி, உஜ்ஜயினி முதலிய இடங்களில் மேளா என்னும் பெருவிழா பன்னிரண்டாண்டுகட்கு ஒருமுறை நடைபெற்று வருவதுபோல பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை இத்தலத்திலே இத்தீர்த்தத்திலே பெருவிழா நடைபெறுகிறது. இவ்வாறு அறுபது ஆண்டுகளில் ஐந்து மகா மகங்கள் நிகழ்கின்றன. அவை நிகழும் வருஷங்கள், ஆங்கீரஸ தாரண, துர்முகி, கீலக, ரௌத்திரி என்னும் ஆண்டுகளாம். அவைகளில் இவ்வாண்டு நிகழ்ந்த மகாமகம் அடுத்துவரும் துர்முகி வருஷத்தில் நிகழ வேண்டியதாகும். அடுத்துவரும் அவ்வாண்டிலே கிரகங்கள் அதற்குரிய வீடுகளில் அமையாது மாற்றம் பெறுவதாலும் இவ்வாண்டு அவ்வாறு அமைந்திருப்பதாலும் ஓராண்டு முன்னதாகவே அதாவது பதினோராம் ஆண்டிலேயே இம்மகாமகப் பெருவிழா நடைபெற வேண்டியதாயிற்று.

## கிரக அமைப்பு.

தேவகுருவாகிய வியாழபகவான் சிங்கராசியை அடைய, சிங்கராசிக்குரிய சூரியன் தன் புதல்வனாகிய சனிபகவான் வீடுகளுள் கும்பராசியாகிய ஏழாமிடத்துக்குவர அப்போது மகமும் பௌர்ணமியும் கூடிவரும் நாளில் சந்திரனும் சிங்கராசியிலுள்ள வியாழபகவானுடன் சேர்வதால் குரு சந்திரன் என்னும் இருவரிடத்தும் சூரியனுடைய பார்வையும் சூரியனிடத்து குரு, சந்திரன் என்னும் இருவர் முழுப்பார்வையும் நிகழ்வதால் அதுவே மகா மகத்துக்குரிய புண்ணிய காலமாக மேற்கொள்ளப்படுகிறது. இவ்வாறு குருபகவான் ஆண்டுக்கொருவீடாக மாறி மாறி சிங்கராசிக்கு வரப் பன்னிரண்டு ஆண்டுகளாகின்றன. இந்தமுறை மகா மகம் நடைபெற வேண்டிய துர்முகி வருடத்தில் சூரியன் கும்பராசிக்குவரும் மாசிமாதம் வரை குருபகவான் சிங்கராசியிலில்லாமல் துர்முகி வருடம் ஐப்பசிமாதம் 4-ம் தேதியே கன்னியாராசிக்கு மாறிப் போய் விடுகின்றார் ஆதலின் இந்த முறை துர் முகி வருடத்தில் இல்லாமல் மன்மத வருடத்திலேயே நடைபெற வேண்டியதாயிற்று.

## பழங்காலத்தில் :—

இந்த மகாமகப் பெருவிழா முற்காலத்தில் பவ, விய, விளம்பி, சாதாரண, துந்துபி என்னும் வருஷங்களில் நடந்து வந்திருக்க வேண்டும். கிரக நிலை அவ்வாறு அமைந்திருந்த காரணத்தால் அவ்வாறு நடைபெற்றிருக்க வேண்டும்.

இது

"பவே வியே விளம் பேச ததா சாதார ணேபிச!
துந்து பௌ சம்ஹா பாக மகா மகப் பிரகீர்த்தித:!!"

என்னும் சுலோகத்தாலறியக் கிடக்கின்றது.

ஒவ்வொரு கிரகங்களும் ஒவ்வொரு நட்சத்திரத்தின் நான்கு பாதங்களில் ஒவ்வொரு பாதத்திலும் இருக்கவேண்டிய கால எல்லை வரை இல்லாமல் விரைவாக வேறுபாதத்திலாவது நட்சத்திரத்திலாவது செல்லுங்காலத்து **"அதிசாரம்"** என்றுபெயர். ஒருபாதத்திலிருந்து மற்ருெரு பாதத்திற்குச் சென்று மீளவும் தான் முன்னே இருந்த பாதத்திலாவது நட்சத்திரத்திலாவது திரும்பி வருங்காலத்து **"வக்கிரம்"** என்று பெயர்.

இவ்வாறு குருபகவான் அதிசாரமாகவோ வக்கிரமாகவோ தனக்குரிய காலத்திலன்றி வருவதால் குறிப்பிட்ட வருஷங்களுக்கு முன் பின்னாகவும் இது நிகழும். இதனை.

> "அதிசாரே அதவா வக்ரே ஜீவேசிம்ம கதேஸதி!
> மாகாப்தே மாக மாஸேது மகா மாக விருதம் சரேத்!!"

என்னும் சுலோகத்தாலறியலாம்.

தங்களிடத்து மூழ்கினோருடைய பாவங்கள் எல்லாவற்றையும் போக்கவல்ல, கங்கை, யமுனை, கோதாவிரி, சிந்து, நருமதை, சரசுவதி காவேரி, கன்னியா குமாரி, சரயு, பயோட்டினி, (பாலாறு) முதலிய நதிகளெல்லாம் தம்மிடத்து தோய்ந்து ஆன்மாக்கள் ஒழித்த பாவங்களை இத்தீர்த்தத்திலே மூழ்கி போக்கிக் கொள்ளுவதாகச் சொல்லப்படுகிறது. இந்த நதிகளின் அதிதேவதைகள் மடந்தையுருவொடு திருக்கைலாயம் சென்று சிவபெருமானிடம் இவ்வாறு தாம் எய்தும் பாவங்களைப் போக்கும் வழி எவ்வாறு என்று கேட்குமளவில் "இத்தீர்த்தத்திலே மகாமகத்திலே மூழ்கி வழிபட்டு உங்கள் பாவமெல்லாம் போக்கிக் கொள்வீர்களாக" என அருளியவாறே அவ்விதம் ஆடுதற்பொருட்டுத் திரும்பி வருங்காலத்து ஸ்ரீ காசியை அடைந்து தங்கி இருந்தனர். பின்பு ஸ்ரீ விசுவநாதப்பெருமான் துணைவரக் குடமூக்கை அடைந்து அக்கினி திக்கில் உள்ள இத்தீர்த்தத்தில் ஆடினர். பின் நவகன்னியரும் அங்குள்ள விசுவேசுரர் சந்நிதியில் தங்கியிருந்தனர் என்ப. இன்றும் அவ்வாலயத்தில் அவர்கட்குத் திருவுருவம் தெற்கு முகமாக அமைத்திருப்பதைக் காணலாம்.

மகாமக தீர்த்தமாகிய இவ்வொரு தீர்த்தத்திலே, பிரமதீர்த்தம், இந்திரன் முதலிய அஷ்டதிக்குப் பாலகர் தீர்த்தம், கங்கை முதலிய ஒன்பது கன்னியர் தீர்த்தம், அறுபத்தாறு கோடி தேவாதியர்தீர்த்தம் முனிவர் தீர்த்தம் முதலிய சகல தீர்த்தங்களும் அடங்கி யுள்ளன. கங்கைமுதலிய தீர்த்த மாதர்கள் தாங்கள் அடைந்துள்ள பாவங்களைக் கழிக்கும் பொருட்டு வந்து நீராடும் பெரும் சிறப்பினை சைவசமயாச்சாரியருள் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் குடந்தையில் நாகேச்சுரர் கோவில் என்று வழங்கப்பெறும் குடந்தைக் கீழ்க் கோட்டத்துத் தேவாரத்திலே

திருச்சிற்றம்பலம்.

"ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளேக்கின் றேனே
இப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவி அம ருலகனைத்து முருவிப் போகக்
குறியில்அறு குணத்தாண்டு கொண்டார் போலும்
தாவிமுதல் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதி பொற் ருமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனுரே"

திருச்சிற்றம்பலம்.

என்று கூறியிருப்பது கொண்டும் அறியலாம்.

## ஆதி கும்பேசுரர்.

வேட்டுவ வடிவினராய் வந்த சிவபெருமான் மூக்கைச்சிதைத்துக் கவிழ்த்த அமுத கும்பத்தை அடுத்தார். அமுதத்தால் வெண் மணலைச்சேர்த்து கும்பத்தினுட்செலுத்தி அழகிய சிவலிங்கம் ஆக்கினர் பூசித்தார். வேட்டுவவடிவத்தை மாற்றிச் சோதிவடிவாய் அவ்விலிங்கத்தினுட் புகுந்து திகழ்ந்தனர். இத்தலத்து இவ்விறையவர் பிரமசிருட்டிக்கு முற்பட்டு விளங்குவதனால் ஆதிகும்பேசுரர் என்றும் அமுத கும்பத்திடைத் தோன்றிய அதனால் அமுதகும்பேசர் எனவும் வழங்கப்படுவர். கயிலாசத்திலிருந்து உமாதேவியாரும் இத்தலத்து வந்து மங்களநாயகி என்னும் திருநாமத்துடன் இடப்பாகத்தில் அமர்ந்து அருளினர். இந்தப்பீடம் மங்களபீடம் என்றும், மந்திர பீடம் என்றும் வழங்கப்படும். மங்களாம்பிகையும் மந்திரபீடேசுவரி என்ற பெயரைப் பெறுவர். கும்பேசுரரை வழிபட்டுப் பேறு பெற்றோர் பலராவர்.

## வேறுமூர்த்திகள்.

குடமூக்கு என்னும் இத்தலத்தையன்றிக், குடந்தைக்கீழ்க் கோட்டம், (நாகேச்சுரர் கோவில்) குடந்தைக்காரோணம் என்னும் இரண்டு திருத்தலங்கள் தேவாரப்பாடல் பெற்றுள்ளனவாகும். இத் தலங்களில் வழிபாடு செய்து பேறுபெற்றவர்களும் பலராவர்.

இத்தலத்து கும்பேசுரர், நாகேசுரர், விசுவேசுரர் என்னும் இம்மூர்த்திகளையன்றி சோமேசர், அபிமுகேசர், கவுதமேசர், பாணபுரீசுரர் வேறு பல மூர்திகட்கும் தனித்தனி ஆலயங்களுள்ளன. சாரங்கபாணி, சக்ரபாணி, இராமசுவாமி, ஆதிவராகர், இலக்குமி நாராயணர், வரதராசர் முதலிய விஷ்ணு மூர்த்திகளுக்கும் தனித்தனி கோயில்களுண்டு. காளத்திநாதர், சுரநாராயணர், வேதநாராயணர் முதலிய மூர்த்திகட்கும் ஆலயமிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

இங்குள்ள பல தீர்த்தங்களுள் அமுதவாவி, பொற்றாமரை, காவிரி, சூரியபுஷ்கரணி, சந்திரபுஷ்கரணி, மகாமக தீர்த்தம் என்பவை முக்கியமானவையாம்.

திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், தாராசுரம், சுவாமிமலை, பாடலவனம் (கருப்பூர்) என்னும் இத்தலத்தைச் சூழ்ந்த ஐந்து திருத்தலங்களை பஞ்சக்குரோசத்தலம் என்ப.

## மகா மகப் பெருவிழா.

இத்தலத்தில் கோவில்கொண்ட மூர்த்திகள் பலவற்றிற்கு வெவ்வேறு காலங்களில் பிரம்மோற்சவம் நடைபெறுவது வழக்கமாயினும் மகாமக வருடத்தில் மட்டும் மகாளை ஒட்டியே அத்திருவிழா நடைபெறுவது வழக்கம். இதனுல் அப்போது ஏறக்குறைய பதினைந்து பதினறு ஆலயங்களிலுள்ள மூர்த்திகளை ஒரே காலத்தில் தெரிசிக்கலாம். இவ்வாண்டு நடைபெற்ற மகாமகத்துக்கு புகைவண்டி மார்க்கத்தில் மட்டும் பதினன்கு லக்ஷம் பிரயாணச் சீட்டுகள் விற்பனையானதாகச் சொல்லப்படுகிறது. அத்துடன் பஸ் மார்க்கமாகவும், சொந்த கார்கள் மூலமாகவும், நடந்தும் வரும் மக்களையும் சுமார் ஆறு லட்சம் என மதிப்பிட்டு இருபது லட்சம் மக்கள் கூடியிருந்ததாகப் பத்திரிகைகட்கு நிருபர்கள் செய்தியனுப்பி யிருந்தனர்.

இவ்விருபது லட்சம் மக்கள் ஒரு சாதாரண அளவுள்ள நகரத்தில் கூடவும், ஒருசிறு குளத்தில் மூழ்கவும் எவ்வித அசம்பாவிதமும் நடவாமல் நிகழவும் வேண்டியதற்கு அதிகாரிகள் எவ்வளவோ ஏற்பாடு செய்திருந்தனர். போலீஸ் அதிகாரிகள், சாரணர்படை, (அதில் பெண்களும் உண்டு) நகரசபையினர், மாவட்டக் குழுவினர் (ஜில்லா போர்டு) புகைவண்டி அதிகாரிகள் முதலிய எல்லோருமே ஒருமுகமாக உண்மையோடு உழைத்து எல்லா வசதிகளும் செய்து வைத்திருந்தனர். இவ்வளவு மக்கட்கும் இலவசமாக உணவளிக்கப்பல அறநிலையங்களில் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. விலை கொடுத்து உண்போர்க்கு உணவு விடுதி (கிளப்) களில் இயன்ற அளவு வசதி செய்திருந்தனர். சில வருடங்கட்கு முன்னே பிரயாகையில் ‘மேளா’ நடைபெற்றபோது பல ஆயிரக்கணக்கில் மக்கள் மடிந்தனர் என்பது பிரசித்தம். பெரிய ஊர்களில் விசாலமான நதிகளில் மூழ்கி விழாக் கொண்டாடும்போது அத்தகைய அசம்பாவிதங்கள் நடைபெறுமாயின் இந்தச்சிறு நகரத்தில், சிறுவழிகளில், சிறுகுளத்தில் இப்பெருங் கூட்டத்தினர் யாதொரு அசம்பாவிதமும் இன்றி விழாக் கொண்டாடினர் எனின் அதற்கு இந்த நாட்டு மக்களின் பொருமைக்குணமே பெரிதெனப் போற்றப்படவேண்டும். அதிகாரிகளும், பிறரும் எவ்வித முயற்சிகள் செய்யினும் மக்கள் ஒத்துழைப்பின்றேல் எவ்விடத்திலாவது ஏதாவது அசம்பாவிதத்தை உண்டாக்கிவிட்டு அவர்கள் முயற்சியையும் உழைப்பையும் பயனற்றதாக்கிவிடும். ஆதலின் இங்கு தமிழ்நாட்டு மக்களின் கடமையுணர்ச்சியே கருதத்தக்கதாகும்.

# அவிரோத வுந்தியார்.

தவத்திரு. சுவாமி முக்தானந்தா அவர்கள்,
(சங்கமூர்த்தி, ஆனந்தாஸ்ரமம், வியாசர்பாடி, சென்னை.)

முன் (ம 2 இ 2 ப 40) தொடர்ச்சி.

பொய்யாங் குடும்பப் பொறை கொளின் எவர்க்கும்
மெய்யா முணர்வு விளைவதே யின்றெனல்

அல்லல் என்ற பள்ளத்தில்தான் உயிர்களெல்லாம் அழுந்தி அழிகின்றன. அல்லல் என்பது கரையிலாத் துன்பம். துறையிலாப் பாழ்ங்குழி போன்றது. இதனுள் சிக்குண்டு தவிக்கும் உயிர்கட்கு நாம் கிடந்துழலும் இது, துன்பப் படுகுழிபோன்ற தோற்றமே உண்டாவதில்லை. இந்தத் துன்பப்படுகுழியாகிய அல்லற் பள்ளத்திலிருந்து, விடுபடுதல் வேண்டுமென்ற விழைவு, ஏன் உண்டாகப்போகின்றது? இதை விட உயர்வானதொன்று உள்ள தென்ற எண்ணம், முதலில் உண்டாதல் வேண்டும். அதுவே இன்பப்பெருங்கரை என்று தோன்றுதல் வேண்டும், அதனை நாம், மிகமுயன்று அணுகுதல் வேண்டுமென்ற எழுச்சி வேண்டும். அந்தக் கரையில் ஏறுதற்கு ஆவல் வேண்டும். அந்தக் கரையை அடைந்தவுடன், இந்த அல்லல் என்னும் அறுதியிலாத் துன்பம், நமக்கு எங்கிருக்கப் போகிறது? ஏறிய பின் இராதென்ற எண்ணம், உயிர்கட்கு உண்டாதல் வேண்டும் இத்தகைய எண்ணத்திற்கே இடமின்றிய, சில உயிர்கள், தாமிருக்கும் இந்த நிலைமையை விட, வேறொரு நிலைமை உளதென்றோ? இலதென்றோ? எண்ணுவதற்கு அறிவில்லாதவை. ஆதலால், அவை இதிலேயே கிடந்து எக்களிக்கின்றன. இதிலேயே அழிகின்றன மீண்டும் இதிலேயே புழுக்கள்போன்று உண்டாகின்றன. பின்னும் இதற்கே ஆட்படுகின்றன. இப்படி, பலகோடி உயிர்கள் போக; இன்னும் பல கோடி உயிர்கள் அல்லல் ஒருவாறு அரிதாகத் தோன்றப் பெறினும்; இதினின்று தப்புவதற்கு வழிகாணாதவை. காண்பதற்கு அறிவற்றவை. ஆதலால் அவை இதிலேயே அழுந்தித் தவித்துப் புழுங்குகின்றன

இன்னும் பல கோடியுயிர்கள், புல், பூண்டு, மரம் முதலியவைகளாய்க் காணப்படுகின்றன. இவை தொட்டால் தெரிந்து கொள்ளுந் தோலுணர்வு மட்டுமா யுள்ளவை. இவையே உற்றறியும் ஓரறி வுயிர்கள். கிளிஞ்சில், சங்கு முதலிய உடம்புகளிலுள்ள உயிர்கள் சுவையுணர்வையும், உடையவை இவை ஈரறி வுயிர்கள் எனக் கூறப்படுகின்றன. கரையான், எறும்பு, இன்னும் இவை போன்ற உடம்புகளில் உள்ள உயிர்கள், முன்னுள்ள இரண்டுணர்வுகளுடன், முகரும் உணர்வையும் உடையன, இவை மூன்றறி வுயிர்கள் எனப்

படுவன. தும்பி, வண்டு இன்னும் இவைபோன்ற உடம்புகளுடன் இயங்கும் உயிர்கள் காணும் அறிவையும் உடையவை. இவை நான்கறிவுகளை மட்டும் பெற்றவை.

இங்ஙனம் நான்கறிவு பெற்ற உயிர்கள் கூட, நாம் பிறந்தோமென்றும், இன்ன விடத்தில் இத்தனை நாள் வாழ்ந்தோம், இந்த வகையாக அழிந்தோம் என்றும், உணரும் ஆற்றலில்லாதவையாய் ஒழிகின்றன.

மேலிடத் துறையும் வானவர் என்போரும், கீழிடத்தில் வாழ்பவர் என்ற நாகர் என்போரும், நடுவிடத்தில் வாழ்கின்ற நம்மனோராகிய மனிதரும், ஐயறிவுடையவர்கள் எனப்படுவர். இவர்களோடு கூட விலங்குகளும், பறவைகளும் ஐயறிவினவே, ஐயறிவாவது, முன்னர்க் கூறப்பட்ட, நான்கு வகையான அறிவுகளுடன், செவியறிவுஞ் சேர்ந்து ஐந்து வகையான அறிவென்பதாகும் இத்தனை வகையான அறிவுகளமையப்பெற்ற, எண்ணிறந்த பலகோடி உயிர்கள் உள்ளன. இவற்றுள் மக்களுயிர் மட்டும் மிகமிகச் சிறப்பு வாய்ந்ததாகும், என்னையோ வெனின்? அதுவே ஆறறிவுடைய வுயிரெனப்படுவது.

ஆறறிவென்பது முன்னைய அறிவுகளும் இதுவும் ஒன்றாக வைத்து எண்ணப்படும் இலக்கண முடையதன்று, மற்றோ? முற் கூறிய ஐந்துணர்வுகளாலும், உணரப்படும் பொருள்களின் நன்மை தீமைகளைப் பிரித்தறியும் பேற்றிமையுடையது. ஐந்தறிவுகட்குங் கருவியாயுள்ளவைகளை, அவ்வப்போது பொருள்கள் மேற்செலுத்துவது, செல்லவோட்டாமல் தடைபோட்டு நிறுத்துவது. ஊன்றியுன்னும் ஆற்றல் வாய்ந்தது. நல்லனவாய் வேண்டியவற்றை நாடவும், தீயனவாய் வேண்டா வற்றைநாடாது விடவும் செய்கின்ற தன்மை வாய்ந்தது. இதுவே பகுத்தறிவெனவும், விவேக ஞானம் எனவும் பேசப்படுவது. இதுதான் இடர் களைவது. பிறவியைப் பெயர்ப்பது. பெரும் பொருளாகிய ஆத்மாவை ஆய்வது. ஆன்மா வல்லாதவற்றைக் காய்வது.

இத்துணைப் பெருமையும் உரிமையும் உடைய ஆறறிவைப் படைத்த மக்களும்; இடிகரை யென்றும், நீர்க்குமிழி யென்றும், நிலையாமை யென்றும், வெளிப் படையாகப் பழிக்கப்படுகின்ற இவ்வுடம்பையே; உயிராக எண்ணிக்கொண்டு அல்லற் படுகின்றார்கள். இந்த அல்லலினின்றும் கட்டாயமாய் விடுபடவே, இவர்கள் மக்களாய்ப் பிறந்தார்கள். இதனை உணர்ந்தார்களில்லை, மக்களே பல கோடி பிறவிகளில் பண்பட்டு உயரிய உடம்பு பெற்றவர்கள். ஆதலால், அல்லல் ஒழித்தற்கு மக்களே உரிமை பூண்டவர்கள். இந்த அல்லல் ஒழிந்தால்தான், மக்களின் மாண்பாகிய மெய்யுணர்வை

யெய்துதல் கை கூடும். அல்லல் ஒழிதல் வேண்டின், குடும்ப மென்னும் நெடுங்கல்லாகிய சுமையை இறக்கிவிடுதல் வேண்டும். என்பதையே அவிரோத உந்தியார் எதிர்மறை முகத்தால் வினவி, எய்தும் பொருளை எடுத்துரைப்பது காண்பாம்.

(உ0) அ—உந்தியார்:—

குடும்பபா ர(ம்) தலைக் கொண்டவர்க் (கு) அல்லல்
விடும் பரி(சு) இன்மையால் உந்தீ பற
மெய்யுணர்(வு) எங்ஙனும் உந்தீ பற.

பொழிப்பு:—

குடும்ப பாரம், தலைக் கொண்டவர்க்கு, அல்லல்விடும் பரிசு, இன்மையால், எங்ஙன் மெய்யுணர்வு ஆம் (என்று) உந்தீ பற.

பொருள்:—

'குடும்ப பாரம்'—குடும்பமாகிய சுமையை, 'தலைக் கொண்டவர்க்கு'—(காக்கும் பொறுப்பைத் தனதாக) ஏற்றுக் கொண்டவர்க்கு, 'அல்லல்'—(சூழ்ந்தவர், தன்னவர்; இவரைக் காப்பது நான்; இவர்க்கு, பொருள் தேடலும் பங்கிடலும், என் வேலை; இடையூறுண்டாகாமற் காப்பது என் பொறுப்பு; அளவாய்ச் செலவிடுவது என் அலுவல், என்பனவும்; இவர்க்கு நோய் முதலிய நேரின் மாற்ற முயல்வதும், முடியாவிடில், வருந்துவதும் முதலாகவுள்ள) அல்லல்கள். 'விடும் பரிசு'—(அவரை இடைவிடாது சூழ்ந்துகொண்டுவிட்டு) நீங்குந் தன்மை, 'இன்மையால்'—(நல்ல குருவை அடைந்து, நிலையுடைப் பொருள் நிலையாப் பொருள்களைக் குற்றமறக்கேட்டு, அதற்குத் தக்க வாறு நொடிப்போதேனும் அலைவற நில்லாத வரையில்) இல்லாமை யால்; 'எங்ஙன்'—எப்படி, 'மெய்யுணர்வு'—உண்மை யுணர்வாகிய ஆன்ம அறிவு; 'ஆம்'—உண்டாவதாகும், (ஒருவேளை மெய்யுணர்வு கூடினும், அது முதிர்ந்து நிலைபெறு முன்னம் இடையூறுகளால் தாக்கப் பட்டுத் தடைபட்டுச் சிதைந்து போதல் கூடுமாதலால், உண் டாகமாட்டாது என்று கூறிக்கொண்டு) உந்திப் பறவுங்கள் சிறுமிகாள் உந்திப் பறவுங்கள் என்பது.

ஒருவன் மெய்யுணர்வை யுறுவதே பிறப்புரிமை, இதனைப் பெற வேண்டினோன், அல்லல் எனுந் தொல்லை யகன்றவனுதல் வேண்டும். அல்லல் ஒழிய விரும்பினோன், குடும்பச் சுமையை அறவே இறக்கிவிடுதல் வேண்டும் என்பது.

எடுத்துக் காட்டுகள்:—

திருவள்ளுவர்:—

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாத அவர்க்கு."

**திருஞான சம்பந்தர்:—**

" தந்தை தாய் தன்னுடன் புத்திரர் தோன்றினர் தார மென்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்து போக் கில்லெனப் பற்றினயே."

**தேவாரம்:—**

" பழகினல் வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடின் வேண்டிய தெய்தொணுது."

**மேலும்:—**

" அருத்த மும்மனே யாளொடு மக்களும்
பொருத்த மில்லை பொல்லாதது போகட்டும்."

**திருப்பாட்டு:—**

"பதியும் சுற்றமும் பெற்ற மக்களும்
பண்டையார் நல்ல பெண்டிரும்
நிதியும் இம்மனே வாழும் வாழ்க்கை
நினைப் பொழி மட நெஞ்சமே."

**திருவாசகம்:—**

"தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதி வகையும்
யாமார் எமதார் பாசமார் என்ன மாயம் இவை போக
கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்றன் [குறிப்பே குறிக்கொண்டு
போமாறு அமைமின் பொய் நீக்கிப் புயங்கன் ஆள்வான் [பொன்னடிக்கே."

**பட்டினத்தார்:—**

"திருவடி பிடித்து வெரு வரல் விட்டு
மக்களும் மனேயும் ஒக்கலுந் திருவும்
பொருளென நினையாதுன் அருளினே நினேந்து."

**அருணகிரியார்:—**

"வளைபட் டகைமா தொடுமக் களெனும்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ."

**திருவாய்மொழி:—**

"கொண்டபெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்ட தொடு பட்டதல்லால் காதல் மற்று யாது மில்லை"

**தத்துவராயர்:—**

"தந்தையொடு தாய்மைந்தர் முன்பின் உடன்வந்தார்
தாரமொடு பேரர்மிகு கூரும் உறவாகும்
பந்தமென வேவந்த தொந்த மிவை
ஒன்றிற் பட்டதல காணுமிவை விட்டுவிடு."

**சிவதருமோத்தரம்:—**

"மண்ணினும் தனத்தினும் மனைக்கு வாயத்தநல்
பெண்ணினும் மகவினும் பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார்."

**அமுதசாரம்:—**

"மடம்படும் இப்பிறவி மாற்றநினை வார்க்கு
உடம்பு மிகையென்று உணர்வுற்று—அடங்கத்
துறவா மனிதர்க்(கு) எளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற."

**சிவானந்த மாலை:—**

"உடம்பு மனைவி மக(வு) உற்றாரோ(டு) ஊர் கேள்
அடைந்த தனம் வீட்டிமை காணி—தொடர்ந்தவிவை
என்ன வெனு(ம்) சொல் நினைவும் போனல் இறையருளால்
மன்னிய வனைப் பெறு (ம்) ஆன் மா."

**ஒழிவி லொடுக்கம்:—**

"நாடுநகர் வீடுடையா(ள்) தாய்தந்தை நட்பு மக்கள்
மாடுகுலம் பொன்னுடன் பின் வாதனைகள்—கூடத்
தொடுத்த வலைக் கண்ணித் தொடக்கிதை இப்போது
விடப் பெறுவார் ஏன் பிறப்பார் மேல்."

(தொடரும்)

# பிறவியைப் பழித்தல்.

தவத்திரு. சுவாமி அருணகிரிநாதரவர்கள்
(நாராயணதேசிகர் நிலையம், சென்னை.)

முன் (ம 2 இ 2 ப 44) தொடர்ச்சி

மாணவன்—அருளுருவாகிய ஐயனே! யான் எடுத்த பிறவிகளில் பல இடுக்கண்களும் துன்பங்களும் துய்த்தபோதிலும் மக்கட் பிறப்பால் அனுபவிக்கப்படும் சுகபோகங்களைத் துய்க்க வில்லையா?

குரு—ஏ மாணவனே! நீயும் மற்றவரும் எடுத்த பிறவிகளிலும், இனியெடுக்கப்போகும் பிறவிகளிலும் துய்த்த (அநுபவித்த) துய்க்கப்போகின்ற உலக சுகபோகங்களையும், தொகுத்துக் கூறுகின்றேன். சற்று நின் மனத்தை அமைதியாக வைத்து ஊன்றிக் கவனித்துச் சிந்தித்து தெளிவடைவாயாக.

ஏ! மகனே! நீ எடுத்த பிறவிகள் தோறும், உண்பதற்குத் தகுதியாய உணவுகளாகிய (அரிசி, பருப்பு முதலிய) வித்து வகைகள். கீரைகள் என்று சொல்லப்படுகின்ற—பல தழை வகைகள். கத்திரி, அவரை, வெண்டை முதலிய காய் வகைகள், வாழை, பலா, மா முதலிய பழ வகைகள், காய்ந்துலர்ந்த சுண்டை முதலிய வற்றல் வகைகள், பால், தயிர், மோர், வெண்ணெய், நறுநெய், தேன், கரும்பிரதச் சருக்கரை விரவிய சிற்றுண்டி வகைகள் ஆகிய அறுசுவை உணவுகளைத்தவிர வேறு எவைகளை உண்டு மகிழ்ந்தனை சொல்.

இலட்சக்கணக்கான பட்டுப்பூச்சிகளைக் கூண்டோடு எடுத்துக் குவித்து கொதிக்கும் வெந்நீரிற் கொட்டி வேகவைத்துக் கொன்று பிரித்தெடுக்கப்பட்ட பட்டு நூலால் நெய்யப்பட்ட பல நிறப்பட்டாடைகள், பரித்திச்செடிகளிற் காய்த்து காய்ந்து வெடித்த வெண்மையாகிய பஞ்சிலிருந்து நூற்றெடுத்த நூல்களில் பல நிறச்சாயந் தோய்த்துப் பலவிதமாக நெய்யப்பட்ட ஆடைகள் குரும்பையாட்டின் மயிர், எலிமயிர், முதலிய பலபிராணிகளின் மயிர்களால் நெய்யப்பட்ட கம்பளங்கள் முதலியஉடைகளைத் தவிர வேறெவைகளை உடுத்தி மகிழ்ந்தனை சொல்.

குளிர்ச்சி பொருந்திய பன்னீரும், கஸ்தூரி, புனுகு, சவ்வாது சந்தன அத்தர் முதலிய நறுமணப் பொருள்கள் கலந்த சந்தனக் குழம்பு, அகிற்குழம்பு முதலியவைகளைத் தவிர வேறெந்த வாசனைப் பொருள்களை உடம்பிற் பூசிமகிழ்ந்தனை? சொல்

நீரிடைத் தோன்றிய தாமரை, நீலோற்பலம், செங்கழுநீர், முதலிய மலர்கள், நிலத்திடை தோன்றிய செடிகளாகிய செவந்தி, ரோஜா, முதலிய மலர்கள் கொடிகளிற் பூக்கின்ற மல்லிகை, முல்லை,

சங்குப்பூ முதலிய மலர்கள், மரத்தின் கிளைகளிற் பூக்கின்ற செண்பகம், மந்தாரை கொன்றை முதலிய மலர்களைத்தவிர வேறெவைகளைக் கொண்டையிற் சூடி மார்பிலணிந்து மகிழ்ந்தனை? சொல்

உடுக்கைபோன்ற சிறிய இடையும், தென்னையின் இளங்குரும்பைகளைப், போன்ற குயங்களும், குமிழ் போன்ற மூக்கும், கெண்டையை ஒத்த விழிகளும், முல்லையை ஒத்தபற்களும், தாமரை மலர் போன்ற அழகிய முகமும், கருவண்டுகள் மொய்த்திருப்பது போன்ற நீண்ட கூந்தலும், மூங்கிலை யொத்த தோள்களும், அன்னத்தைப் போன்ற நடையினையும் உடைய அழகிய ஆடை ஆபரணங்களையும் அணிந்த மாதரின்பத்தைத் தவிர வேறெந்த இன்பத்தைத் துய்த்து மகிழ்ந்தனை? சொல்.

விடய இச்சையை வென்ற நுண்ணிய பேரறிவாளர்களாகிய ஆன்ம ஞானிகள் அடைந்த பேரானந்தப் பிராப்தியாகிய சிவன் முத்தியை அடைந்தனையா? இல்லையே ஆகவே பிறவிதோறும் கண்களாற் பார்க்கப்பட்ட உருவக்காட்சிகளையே மீண்டும் மீண்டும் பார்ப்பதினாலும், காதினாற் கேட்கப்பட்ட இன்னிசை ஓசை ஒலிகளையே மீண்டும் மீண்டும் கேட்பதினாலும் முகர்ந்த நறுமணங்களையே மீண்டும் மீண்டும் முகர்வதினாலும், பஞ்சு மெத்தை தலையணைகளை போட்டு தோலுக்கு மெதுவாக இருக்குமபடி படுத்துப் படுத்தனுபவித்த ஸ்பரிச சுகத்தையே மீண்டும் மீண்டும் விழைவதாலும், நாவால் சுவைத்து உண்ட அறுசுவை உணவுகளையே மீண்டும் மீண்டும் உண்பதினாலும் என்னபயனை அடைந்தனை புதிதாக என்ன இன்பத்தைக் கண்டனை! அந்தோ! உனக்கு ஏன இவைகளிடத்தில் சலிப்போ! வெறுப்போ, தோன்றவில்லை! இவைகளின் மேலுள்ள இச்சையை ஏன் ஒழிக்க விரும்பவில்லை! பகுத்தறிவும் நல்ல கண்பார்வையும் பெற்றிருந்தும் நீ படுகுழியில் அடிக்கடி தவறி விழுவாயேயானால் உன்னை விவேகியென மதிப்பார்களா! அறிவாளிகள். ஆகவே கற்பிதமாகிய உலகவிடய போகத்தைப் பற்றி நன்முய் ஆராய்ச்சி செய்து அவைகளின் மீதுள்ள இச்சையை விட்டு நீங்குவாயாக.

**மேற்கோள்—அநுபவா நந்ததீபிகை.**

உண்டிடு விரைதழை காய்கனி சருகல துண்ணலை பட்டுடைநூல்
உடையொடு ரோமத் துடைநா ரல்லதுடுக்கலை சந்தகில்சேர்
தண்பனி நீர்நா னம்புழு காதிய தடியுடல் பூசலை நீர்
தனிலலர் கொடிகோ டலர்மல ரலது தரிக்கலை மணியணிபூண்
நுண்ணிடை மாதர் முயக்கல துறுகிலை நூறுகம் வாழுகினும்
நுண்ணறி வோர்பெறு பேரின் பச்சுகம் நுகரலை பிறவிதொறும்
கண்டது கண்டுண் டதையுண் பதிலெது காண்குவை மொழியகிலாய்
கண்கொடு படுகுழி வீழ்வது நன்றல கற்பனை விட்டகலே.

(தொடரும்)

சைவசித்தாந்தம்

# சிவஞானபோதம்.

தவத்திரு. திருநீ. சண்முகாநந்த சுவாமிகள்,
(கலைமகள் தமிழ் நிலையம், மதுரை.)

முன் (ம 2 இ 2 ப 35) தொடர்ச்சி.

## மூன்ருஞ் சூத்திரம்.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல ெனுடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தநுவினு ளான்மா. —எனவரும்.

இரண்டாஞ் சூத்திரத்துள் "அவையேதானேயாய்" என வெடுத்துக் கொண்ட ஆன்மாக்கள் சூனிய முதலியவற்றுள் ஒன்ருகற் பாற்று, என அவ்வவ் மதம்பற்றி உண்டாம் கடாவை ஆசங்கித்து ஆன்மா அவற்றிற்கு வேருய் உண்டென்பது கருதல் அளவையான் விளக்கி, ஆன்மாக்களின் மேல் வைத்து மேற்கூறிய இலக்கணத்தை வலியுறுத்துதல் இம்மூன்ருஞ் சூத்திரத்தின் கருத்தாம். பதியுண்மைக்கும், பாசவுண்மைக்கும் பிரமாணங்கூறி, எஞ்சி நின்ற பசுவுண்மைக்குப் பிரமாணங்கூறுதலின், ஒத்தியைபு பெறப்பட்டது.

முதன்மையுடைமை கொண்டு உலகிற்கு நிமித்த காரணமுண்மையை முதற் சூத்திரத்திற்கூறி, காரணமாதற் பொதுமையால், துணைக்காரண முதற்காரணங்களது உண்மையும், அவற்ருன் உலகம் காரியப்படுமாறும், இரண்டாஞ் சூத்திரத்திற்கூறி, பயன் நுகர்தற்குரிய பசுவுண்மைக்குப் பிரமாணம் மூன்ருஞ் சூத்திரத்துட் கூறுகின்ருர். சூத்திரவியைபும் இதனுனே விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:— இலது என்றல் முதலிய அறுவகை யேதுக்களாலும், மாயாவிந்திர தனுவென்னும் நாமவிஷேடணத்தாற் பெறப்பட்ட * குறிப்பேதுவானும், இவற்றின் வேருய் ஆன்மாவெனப் படுவதொன்றுளது என்றவாறு. இச்சூத்திரம் பூட்டுவிற் பொருள்கோள். பூட்டுவிற் பொருள் கோளாவது :— பொருள் கொள்ளும்வகை யெட்டனுளொன்று. அஃதாவது நாண் பூட்டியவில்லின் நுனியும் அடியும் அந்நாணுற் றம்முட் சம்பந்தமுடையனவாதல் போல, செய்யுளின் முதலினும் ஈற்றினும் உள்ள மொழிகள் பொருளாற் றம்முட் சம்பந்தமுடையனவாகக் கொள்ளும் பொருள்

---

* குறிப்பேது— ஏதுப்பொருளைக் குறிப்பாகக் காட்டி நிற்பது.

கோள். ஈண்டுஉளது என்னும் முதன் மொழியும், ஆன்மா வென்னும் இறுதிமொழியும் பொருளாற் றம்முட்சம்பந்த முடையனவாதல் கண்டுகொள்க. உளது என்றது ஈண்டுப் பன்மையுணர்த்துஞ் சாதியொருமை. சாதியொருமையாவது:— ஒருசொல் ஒருமையீறு தோன்றுது நின்றும் பின் ஒருமை பன்மை வினையீருக மேல்வந்து முடிக்குஞ்சொல்லைப் பெற்றும் பெறுதும் தானே பன்மைப் பொருளுணர்த்துவது. இதனை வடநூலார் 'ஜாத்யே கவசனம்' என்பர் "குணமென்னுங்குன்று" என்னும் பொய்யாமொழியில் "குணம்" என்பது சாதியொருமையாதல் போல.

தனுவினுள் ஆன்மாவுளது என ஆன்மாவின்மேல் வைத்துக் கூறினரேனும், தோன்றப்பட்ட வுடம்பாற் றோன்றப்படாத ஆன்மாவிற்கு உண்மை கூறவேண்டுமாகலான், "இவ்வுடம்பு ஆன்மாவை யுடைத்து, அறிதலுடைமையான்; யாது யாது ஆன்மாவை யுடைத்தன்று, அதுவது அறிதலுடைத்தன்று; குடம்போலும்." என்னும் எதிர்மறைய நுமானத்தால் உடம்பின் மேல் வைத்துக் கூறுதல் ஆசிரியர் கருத்தாகுமென்பதை, முதற் சூத்திரத்துட் பதியுண்மையை உலகின்மேல் வைத்துக் கூறியதனுற்காண்க.

ஈண்டுச் சூன்யான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி சூக்கும தேகான்மவாதி, பிராணன்மவாதி, பிரம்மான்மவாதி, சமூகான்மவாதியென்னும் எழுவர் மதங்களையும் மறுக்கும் எதுக்கள் எழனேடும் "ஆன்மாவுளது" என்னும் மேற்கோள் ஒன்றனையே தனித்தனி கூட்டியுரைக்கப் படுதலின் இச்சூத்திரம் எழதிகரணமாயிற்று. அவைவருமாறு:—

முதலதிகரணம். "ஆன்மா இலதென்றலின் ஆன்மாவுளது" எனவரும். ஈண்டு ஆன்மாவென வருவித்துக் கொள்க. என் சொல்லியவாறே வெனின்:—இஃதான் மாவன்று இஃதான் மாவன்று என்று சொல்லும் பொரு ளுண்மையான், இதனின் வேறுய் ஆன்மா வெனப்படுவ தொன்றுண்டு என்க. புத்தசமயத்தர் நால்வருள்ளே, மாத்துமிகர் கூறுஞ் சூனியான்ம வாதத்தை மறுக்கவந்தது இவ்வதிகரணமாம். ஈண்டுச் சூனியமென்றது இன்மையென்னும் பொருளையுடையது. அஃதாவது:- உள்ளதுமன்று இல்லதுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்று எனப்படும்பாழாம்.

அற்றேல் ஆன்மாவில்லையென்னும் எதுவால் அஃதுண்டெனச் சாதித்தல்,முயறகொம்பில்லை யென்னும் எதுவால் அஃதுண்டெனச் சாதித்தலோ டொக்குமன்றே வெனின் :— அற்றன்று, ஆன்மாவிலதென்று கூறும் மாத்துமிகராய சூனியவாதிகளும், இல்லையெனவாளா கூறுது உடல் முதலியவனைத் தினையும், இஃதன்று இஃதன்று எனக் கழித்து ஆன்மாவென்பது சூனியமென்று கூறுபவராதலின் அங்ங

னம் கூறி நிற்பதோர் அறிவுண்மையின் அதுவே மேல் அவையே தானேயாய் என்னும் அதிகரணத்தின்கண் ஆகமவளவையாற் சாதித்த வான்மாவாகலின் "இலதென்றலின் ஆன்மாவுளது" எனமேற் கொண்ட தொக்குமென்பதறிக. அங்ஙனமறியும் அறிவுஞ் சூனிய-மேயெனின் :— அஃதென்னைப் பெற்ருள் மலடி என்பது எங்ஙனம் வியாகாத தோடத்தோடு கூடியதோ அங்ஙனமேயாம். என்னே, பிரதியோகி யுணர்ச்சியின்றி அபாவவுணர்ச்சி உண்டாகாதென்பது சாத்திரக்காரர் நியமமாகலின்.

அற்றேலஃதங்ஙனமாக, அவ்வறிவை யுடல் முதலியவற்றினின் றும் பிரித்து வேருக அறியுமாறும், அதுவே அவ்வான்மாவாமாறும் யாங்ஙனமெனின் :— பெத்த காலத்தில் உடல் முதலியவனைத்தினையுந் தனித்தனி யான்மாவென்று கொண்டு நின்று பின் முறையானே இஃதான்மாவன்று இஃதான் மாவன்று எனக்கண்டு நின்று நீக்கிய விடத்து சூக்கும பஞ்சாக்கர வடிவமாய் அறிந்து வந்த எவ்வறிவுளதோ அதுவே ஆன்மாவாம். அவ்வறிவும் ஆன்மாவன்றெனக் கழிப்பின், அங்ஙனங்கழிக்க அறிவு வேறுண்டெனவாகி வரம்பின்றி-யோடுதலாகிய அனவஸ்தாதோடமுண்டாம், அற்றேல் மாயையும் சிவமும் உளவென்பது மேலேச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையின், அவையே அவ்வறிவினையும் அறிந்து நீக்குமெனல் பொருந்துமாகலான் வரம்பின்றியோடுமாறில்லையெனின் :—நிலமுதலிய காரியமனைத்துமாய் ஆன்மாவோடு சலந்துநின்று பெத்தகாலத்துக் கண்ணுக்குக் கண்ணடி-போல் அறிவை விளக்கி நிற்றல் மாத்திரையே அன்றி அறிவதன்ருக-லான் அம்மாயை ஆன்மாவன்ரும், மாயையான் விளங்கியறியுமான்மா அம்மாயைக்கதீதமாகிய சிவமும் அன்ரும். எனவே ஆன்மா அவற்றின் வேறெனவே கண்டுகொள்க. இதனை

"அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்ருன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

எனவரும் மெய்கண்டதேவ நாயனுர் திருவாக்கானுணர்க. இரண்டாமதிகரணம் "எனதுடல் என்றலின் ஆன்மாவுளது" என-வரும். என்சொல்லியவாருேவெனின் :— மேலேயதிகரணத்து மாத்திய மிகபௌத்தரை மறுத்து மாயைக்குஞ் சிவத்துக்கும் வேருய் அறி-பொருளாகிய ஆன்மாவொன்றுண்டெனச் சாதித்தவிடத்து அவ் வான்மா, மண், நீர், அனல், காற்று, என்னும் நான்கு பூதங்களின் கூட்டமாகிய உடம்பின் கண்ணே நிகழக்காண்கின்றமையானும், அப் பூதங்கள் சடமாயினும் பாகடையுஞ் சுண்ணும்புங்கூடிய விடத்துச் செவ்வண்ணம் பிறக்குமாறுபோல அவற்றின் கூட்டத்திலோர் உணர்-வுண்டாதல் கூடுமாதலானும், யான்பருத்தேன், யான்மனிதன், என

வுடம்பினையே நானென்று வழங்கக்காண்டலானும், உடம்பே ஆன்மா வெனக்கூறும் தேகான்மவாதிகள் கூற்றை மறுத்தற்கெழுந்தது இவ் வதிகரணமாம். எங்ஙன் எனின் :—நான்பருத்தேன், நான்மனிதன் என உடம்பின் குணவிஷேடங்களை உபசாரத்தால் ஆன்மாவிற்கேற்றி வழங்கினும், யான்உடம்பு, யான்கை யான்கால்என உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி, எனதுடம்பு, எனதுகை, எனதுகால், என வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்டலின் அவ்வழக்கமே ஆன்மா வேறுண்டென்பதை அறிவுறுத்துமாகலின் உடம்பு ஆன்மா வன்று என்பதாம்.

அற்றேல் எனதுடல் என்பது * பிரிதின் கிழமைப்பொருள் தாராது, தலைமாத்திரமிருக்கும் இராகுவை இராகுவினது தலையென வழங்குமாறுபோல வழங்கப்படுமென்றால் என்னையெனின் :— அற்றன்று, இராகுவினது தலையென்றாற்போல்வன பெரும்பான்மை பற்றிய வழக்கின்மையின் ஆண்டுஒற்றுமைப் பொருள்கோடல் பொருந்தும். ஈண்டு என்பதி, என்மனைவி, என்பொருள் என்று வழங்குமாறுபோல, என்கை, என்கால் முதலியனவாகப் பலவாற்றானும் பெரும்பான்மைபற்றி யுலகத்துவழங்கக் காண்டலின் இவ்வழக்கம் பிறிதின் கிழமைப்பொருட்கணன்றி வாராமையான் அங்ஙனம் கூறி நிற்கும்பொருள் வேறுண்டென்பது பெறப்படுதலின் அதுவே ஆன்மாவெனக் காண்க.

---

* பிறிதின் கிழமைப் பொருளாவது :—ஆறும்வேற்றுமைச் சம்பந்தப் பொருள்களுள் ஒன்று. அது தன்னின் வேறாயது.

(தொடரும்)

---

53-ம் பக்கம் தொடர்ச்சி

இஃதன்றிக் கடவுளை நிந்திக்கும் ஒரு கூட்டத்தினர் மகாமகம் வருவதற்கு முன்பே தங்களுடைய பிரசாரங்களை ஆங்காங்கு நடத்தியும் மகாமகத் தீர்த்தத்தை மூத்திரக் குட்டை என்றும், மூடிச்ச விழ்ப்பவர்களே! கும்பகோண மகாமகத்துக்குச் செல்லுங்களென்றும் பலவிதமாகப்பற்றிப் பேசியும் பத்திரிகைகளில் எழுதிப் பிரசாரம் செய்திருந்தும் கூட, அவை இந்நாட்டு மக்களின் தெய்வபத்தியின் முன் நில்லாமல் அவர்கள் செவியிலேறவில்லை. செவிடன் காதிலூதிய சங்குபோலப் பயனற்றதாயிற்று. எதிர்பார்த்த அளவுக்கு இரட்டிப்பான மக்கள் வந்தனர், மற்ற எல்லாவிவரங்களும் எழுதப்புகின் விரியுமாதலால் எழுதிய இது கொண்டே மற்றவற்றையும் ஊகித்துணர்ந்துகொள்க.

# துறவு.

தவத்திரு. ஐயாறு அடிகள்,
(சித்தபாலைய தேசிக ஆதீனப்புலவர், பழநி.)

முன் (ம 2 இ 2 ப 30) தொடர்ச்சி.

ஒருவன் தனது பகைவனை அவமானப்படுத்தி துன்புறுத்த வேண்டும் என்று எண்ணினான். அவனை அவமானப் படுத்துதற்கு வேண்டிய இழிந்த பொருள்களைத் தானே சேகரித்தான். சேகரித்த காலத்தில் இழிபொருள்களைத் தானே தொடவும் நேர்ந்தது, அப் பகைவன் எதிர்ப்பட்டபோது அவனை அவமானப்படுத்தி அடித்துத் துன்புறுத்தினான் பகைவன் துன்பமுற்ற காலத்தில் பகைவனால் இரண்டொரு அடியும் பட்டான். பகைவற்குத் துன்பம் செய்ய வேண்டும் என்று நினைத்தபோதே துன்பமுற்றான். பிற்காலத்தே பகைவனால் இவன் அவமானப் படுத்தப்பட்டான். அடிபட்டான் துன்பமுற்றான். முற்பகல் செய்த தீமை பிற்பகல் விளைந்தமையினைப் பாருங்கள்.

பிறர்க்கின்னா முற்பகல் செற்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். —திருக்குறள்.

பிறர்க்குத் துன்பம் செய்பவரிடத்தேதான் துன்பங்கள் சென்று அடைவன. ஆதலால் துன்பமில்லா திருக்க வேண்டும் என்று எண்ணும் தூயோர் பிறர்க்குத் துன்பம் செய்யார். உயிர்கள் இன்புறும் செயல்களையே செய்து தாமும் இன்புறுவர்,

கொல்லாமையே அறவினையாவது, கொல்லுதலே பிறவினையாவது. கொல்லாமையாம் அறவினை எல்லா நன்மைகளையும் தரவல்லது. கொல்லுதலாகிய பிறவினை எல்லாத்தீமைகளையும் தரவல்லது.

பல்லாரொடும் பகுத்துண்டு பல்லுயிர்களையும் ஓம்புதலே முதன்மையான அறமாகும். எள்ளில் நிறைந்த நெய்யேபோல முழுமுதற்கடவுளாகிய எல்லாவுயிர்களிடத்தும் நீக்கமறநிறைந்து நிற்கின்றான். எனவே ஏனைய உயிர்களை துன்புறுத்துவதோ கொல்லுவதோ செய்யின் அச்செயல் கடவுளர்க்குச் செய்யும் செயல் ஆகும். எல்லாவுயிர்களையும் இன்புறச் செய்தல் வேண்டும். நல்லநெறியெனப்படுவது யாதோ எனின் கொல்லாமை சூழும் நெறியேயாகும். நன்னெறியே செந்நெறி, அருள்நெறி, ஒளிநெறி, திருநெறி, உண்மைநெறி, என்றெல்லாம் உயர்ந்தோரால் உவந்துரைக்கப் பெறுவதாகும்.

"நன்னெறி திரிந்துமாறி நவைநெறி நடந்ததென்றே"
என்றார் நமது சேக்கிழார்.

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி" —திருக்குறள்.

கொல்லா விரதமே குவலயமெல்லாம் ஓங்க வேண்டும் என்ற விருப்பத்தினை ஒவ்வொருவரும் உடையராதல் வேண்டும்.

"கொல்லா விரதம் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் னிச்சை பராபரமே"
என்றார் நமது தாயுமானார்.

உலகியல் நிலையைக்கண்டு அதற்கஞ்சித் துறவினை மேற்கொண்டவர்கட்குள் கொலைக்கு அஞ்சிக் கொல்லாமையை மேற்கொண்டவனே தலைவனாவான், ஒருவன் தனது உயிரினை விடும்படி நேரினும் பிறவுயிர்களைக் கொல்லாமையினையே மேற்கொள்ளவேண்டும் உயிர்க்கொலைவேள்வி முதலியவற்றால் இந்திரபதம் முதலியன எய்தலாம் என்னினும் கொலையால் வரும் ஆக்கம் கடைப்பட்டதேயாம்.

அருளுடைமை, புலாலுண்ணாமை, தவம், கூடா ஒழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை என்ற இவ்வொன்பதும் துறவியர் மேற்கொள்ளவேண்டிய விரதங்களாகும். இவ்விரதங்களை மேற்கொண்டவர்கள்தான் ஞானத்தினையடைவார்கள், ஞானமாவது வீடுபயக்கவல்லதாய அறிவு. நிலைத்த பொருள் இன்னது நிலையற்றபொருள் இன்னவை என்றுணர்தலே விவேகம் எனப்படும்.

"நித்திய அநித்தியங்கள் நிண்ணயந் தெரிவிவேகம்"
கைவல்லியம்

நித்த அநித்த நிண்ணயந்தெரிந்தவர்கள்தான் உண்மைத் துறவினை உறுவார்கள். நிலையற்ற பொருள்களின் தன்மையினைச் சிறிதே நினைவிற்குக் கொண்டுவருகின்றேன் இவ்வுலகவாழ்விற்கின்றியமையாத செல்வம் ஒருவரிடத்தே எக்காலத்தும் நிலைத்து நில்லாத இயல்பினது. அறுசுவையுணவினை மனைவி விரும்பியுண்பிக்க உண்டவரும் வறியவராய்ப் பிறிதோரிடத்தே சென்று ஒருகவளம் சோறுவேண்டுமென்று இரந்து நிற்பர். வெண்குடை நீழலில் இருந்து யானைமேலேறிச்சென்ற மன்னரும் கால்தரைதோய நடந்து வேற்று நாடடையினும் அடைவர்.

"குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்"

என்றார் பிறரும்.

நீரிடையே மடங்கிவரும் அலைகளைப் போன்றது செல்வம். நாடகமாடுமிடத்தே மக்கள் திரண்டு வந்து சேருவதுபோலச் செல்வம் ஆம் காலத்தே வந்துசேரும் நாடகம் முடிந்தவுடன் அவ்விடம் வெறுங்களமாவதுபோல ஆகும் செல்வம் நீங்கும் காலத்தே

"கூத்தாட் டவைக் குழாத்தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று" —திருக்குறள்.

எவ்வளவுதான் அயலேநின்று போற்றினும் போங்காலத்தே செல்வம் போய்விடும். மாடம் மாளிகை கூடகோபுரங்களழிவதனையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இந்திரபத முதலானவைகள் இறுதியில் அழிவதனையும் அறிஞர் வாயிலாக அறிந்துள்ளோம். இளமையும் நில்லா, யாக்கையும் நில்லா, நினைப்பினும் கடிதாக இளமை நீங்கும். அதனினும் வேகமாக வருகின்றது இறப்பு. முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒரு பிடிசாம்பராய் வெந்து மண்ணாவர். இவ்வுலகிற்குத் தனித்த பெருமை ஒன்றுண்டு. என்னையோ என்றால் நேற்றிருந்தானொருவன் இன்றில்லை என்னும் பெருமையே.

"நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்றான் எனப்படுதலால்" —நாலடியார்.

உடம்பும் உயிரும் ஒற்றுமை நயம் ஒன்றெனவே தோன்றுகின்றது. வேற்றுமை நயம்பற்றி உடலும் உயிரும் வேறே. கூடு தனித்தொழியும்படி அதனுள் இருந்த பறவையானது பறந்துசென்று விடுகின்றது. கூட்டுக்கும் அதனுள்ளிருந்த பறவைக்கும் உள்ள தொடர்பினை ஒத்ததே உடம்பிற்கும் அதனுள் இருந்த பறவைக்கும் உள்ள தொடர்பு.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு" திருக்குறள்.

செல்வம், இளமை, யாக்கை முதலியன நிலையற்றன என்ற உணர்வு ஒருவற்குளதாமேல் அவனுக்குத்தான் துறவு கைவருவதாகும்.

நிலையாமை இன்னவை என்ற உணர்வுவந்த ஒருவன்தான் துறவில் நிலைபெறுதல்கூடும். ஒருவன் எந்த எந்தப் பொருளில் நீங்கினானோ அவன் அந்த அந்தப் பொருளால் வருந்துன்பங்களை

உறுதலிலன். ஒருவன் உலகியல் நெறியிலே செல்லாதவண்ணம் ஐம்புலன்களையும் அடல்வேண்டும். துறவிற்கு ஒரு பொருளிடத்தும் பற்றுதல் இன்றி இருத்தலே இயல்பு பற்றுதல் உண்டாகுமானுல் மீண்டும் மயக்கமே உளதாகும். பிறப்பினை அறுக்கலுற்றவர்கட்குத் தமதுடம்பினிடத்தே பற்றுவைத்தலும் ஒண்ணுது.

ஒருவன் தன் வீடு, செல்வம், மனைவி, மக்கள், மற்றும், உடன் பிறந்தார் முதலியவரிடத்துப் பற்றுவைத்தல் கூடாது. தனதூர், நாடு என்ற வகையிலும் பற்று உண்டாதலொண்ணுது. குலப் பற்றும் கூடாது. நான் ஒரு துறவியாயினேன் அதனுல் நானே உயர்வுடையேன் துறவியல்லாத மற்றையோர் என்னினும் இழிந்தோர் என்ற எண்ணமும் ஒருவனுக்கு உண்டாதலொண்ணுது. நான் எனது என்னும் அகங்கார மமகாரத்தினை அறுப்பவன் எவ்வுலகினும் மேலான இன்ப உலகினை எய்துவான். உலகப்பற்றுக்களையே பற்றிக்கொண்டு துறவுக்கோலத்தினை மட்டும் கொண்டவர்களைத் துன்பங்கள் விடாமற் பற்றிக்கொள்வன. முற்றத்துறந்தவர்களே தலைவர்கள். அல்லாதவர்கள் மயக்கத்தினையே கொள்வர். பாசவலையிற் சிக்கி துன்புற்றவரே. பற்றறுதியே பிறப்பினை யறுப்பதாகும். ஒருவன் உலகப்பற்றினை ஒழித்த உண்மைத் துறவியரைப்பற்ற வேண்டும். பற்றற்ற துறவி எந்த உண்மைப் பொருளினைப் பற்றி யுள்ளானே அப்பற்றினையே பற்றுதல்வேண்டும்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." —திருக்குறள், துறவு-10

மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைப் பற்றினர். அப்பூதியடிகள் அப்பரைப்பற்றினர். அப்பூதியடிகளார் அப்பரடிகளது திருநாமமாகிய திருநாவுக்கரசரென்ற சொல்லினைப் பலமுறை எழுதியும், சொல்லியும், நினைத்துமே இன்ப உலகெய்தினர். (தொடரும்)

# யோக சிகோப நிஷத்—தமிழ் பொழிப்புரை.

தவத்திரு. திரிமூர்த்தி சுவாமிகள்.
(சாது சுவாமிகள் ஆஸ்ரமம், பழநி.)

முன் (ம 2 இ 2 ப 49) தொடர்ச்சி.

உடலில் எழுபத்திராயிரம் நரம்புவழிகள் உள்ளன. அவற்றுள் சாம்பவி சக்தியாகிய சுழுமுனு நாடி மிகச்சிறந்ததாய் உளது. மற்ற நாடிகள் யாவும் பயனற்றவை எனக் கருதப்படுகின்றன, நாவினது இருபக்கங்கள் தாலு எனப்படுகின்றன. அதனடியில் ஹ்ரீம் என்ற மந்திரத்தை ஜெபிக்கின் சிறந்த இன்பத்தைத் தரும் அமுதம் பெருகுகின்றது. அதினின்றும் மேலேயுள்ள புருவங்களின் நடுவில் ஜெபிக்கின் குண்டலி துரிய நிலையை அடைகின்றது. அதனினுஞ் சிறிது மேலேற்றி ஜெபிக்கின் துரியாதீத நிலையை அடைகின்றது. பின்னர்ப் பெருவழி எனப்படும் பிரம்ம ரந்திரத்தில் இருப்பவளான பராசக்தியை மேற்சொன்ன மந்திரத்தால் ஜெபிப்பாயாக, இதுவே மந்திரயோகத்தால் சக்தியை விழிப்புறச்செய்யும் வழியென்று அறிக. இவ்வாறின்றி வண்டு வடிவ மனமானது சங்கற்ப விகற்ப வடிவ சிருட்டியைச்செய்து மற்ற நாடிகளின் வழிச்செல்லுமாயின் அதுவே பிறவிச் சுழலை உண்டு பண்ணும் வழியாகும். ஆகையால் அவ்வழியை அறவே விட்டு நீங்குவாயாக. (19)

**(அ...கை) அப்பரையை தலையுச்சியில் பரமாத்மாவாகத் தியானிக்க வேண்டுமெனக் கூறல் :—.**

பரம்பொருளானது யாவற்றினுங் கலந்திருத்தலின் போக்கு வரவுள்ளதாம். எங்குமாயிருத்தலின் போக்கு வரவொழிந்ததாம்; ஒளிகளுக்கெல்லாம் ஒளிதந்து நிற்றலின் சித்வடிவ தீபமாம். அதனுலேயே அஞ்ஞானவடிவ இருட்டைக் கெடுப்பதாம். அதுவே எல்லோருடைய உள்ளத்தின்கண் அறிவு வடிவாய் நிலைபெற்று உள்ளதெனக் காண்கின்றேன். அதுவே எனது உள்ளத்தில் ஹம்ஸ வடிவாய் உளதென நிச்சயித்து அதன் பொருட்டு வணங்குகின்றேன். வைகரி வாக்கின் காரணமாய் நுண்ணியதாய் இருப்பது இதயத்திலுள்ள மத்திம வாக்காகும். அம்மத்திம ஒலியின் காரணமாய், சூக்குமமாய், ஒளிவடிவாய் உள்ளீடா யிருப்பது பஸ்யந்தி வாக்காகும். அதற்குங் காரணமாய், உள்ளொளி வடிவாய் நிற்பது பராவாக்காகும். அதன் காரணம் மனம் என்று அறிக. அம்மனத்தில் வைகரி முதலிய யாவும் நிலைபெற்றுள்ளன. அம்மனம், யாதொரு பேரொளியான பெருவெளியில் கலந்து ஒடுங்குகின்றதோ, அதுவே எல்லாமாய்ப் பெரும்பொருளாய் முடிவிடமாயுள்ளதென்று தியானிப்பாயாக. (21)

**(அ....கை) ஆதாரவடிவ பிரம்ம நாடியில் பிராணன் மன முதலியன ஒடுங்கிய பின் முக்தி யுளதாம் எனக் கூறல் :—**

ஆதாரவடிவ குண்டலி சக்தியைச் சுழுமுனே என்றும், ஸரஸ்வதி என்றுஞ் சிலர் கூறுகின்றனர். ஆதாரசக்தியினின்றும் உலகந் தோன்றுகின்றது. மீண்டும் அதனிடத்திலேயே ஒடுங்குகின்றது. அத்தகைய தோற்ற வொடுக்கக் காரணத்தை அறிவதன் பொருட்டு, எல்லா முயற்சியாலும் குருவினது திருவடித்தொண்டை நன்ருய்ச் செய்வாயாக. ஆதாரசக்தியானவள் உறங்கிய பொழுது இவ்வுலகம் தூக்கத்தில் ஆழ்ந்துவிடுகின்றது. அச்சக்தியானவள் உறக்கத்தினின் றும் நீங்கி எழுந்தபொழுது மூவுலகமும் விழிப்புற்று எழுகின்றன. அத்தகைய மூலப்பொருளாயுள்ள ஆதாரத்தை எவன் ஆசாரியனிடங் கேட்டு அறிகின்ருனே, அவன் இருட்டைக் கடந்து பரத்திற்கலந்து இன்புறுகின்ருன். அந்த ஆதாரசக்தியின் ஞான மாத்திரத்தால் மனிதன் பாவங்களிலிருந்து விடுபடுகின்ருன். மின்னற் கூட்டங்கட்கொப்பான காந்தியுள்ள ஆதாரசக்கரத்தின் விளக்கம் ஒருவனுக்கு உண்டாயின் அவன் அப்பொழுதே முக்தனுகின்ருன். இதில் ஐயமில்லை. அத்தகைய ஆதாரசக்கரத்தின் விளக்கம் குருவரு ளின்றித் தானே உண்டாவதன்று. குருவருள் பெற்றவன் ஆதார சக்கரத்தின் ஒளியால் புண்ணிய பாவங்களை அறுத்து எறிகின்ருன். ஆதார சச்கரத்தில் பிராணனைத் தடுத்து நிறுத்துவதால் அவன் ஆகாய வெளியில் மறையுமாற்றலைப் பெறுகின்ருன். ஆதார சக்கரத் தில் காற்றைத்தடுத்து நிறுத்துவதால் உடல் நடுக்கம் எய்துகின்றது. ஆதாரசக்கரத்தில் பிராணனைத் தடுத்து நிறுத்துவதால் யோகி எப் பொழுதும் ஆனந்தமேலீட்டால் நடனஞ் செய்கின்ருன். ஆதார சக்கரத்தில் காற்றைத்தடுத்தலால் அங்கேயே உலகைக் காண்கின்ருன். ஆதாரசக்கரத்தில் சிருட்டி, திதி, சம்மாரம்மூன்றும் நிலைபெற்றுள்ளன. எல்லாத்தேவதைகளும் ஆதாரசக்கரத்தில் இருக்கின்றன. ஆகையால் ஆதாரசக்கரத்தை குருவருளால் நன்கு பற்றுவாயாக. ஆதாரசக்கரத் தின் மேலிடமாகிய புருவ நடுவில் திரிவேணீ சங்கமம் உளது. அதுவே இடை பிங்கலை, சுழுமுனே கூடுமிடம் என்று அறிக. அச்சங்கமத்தில் குளித்தும், குடித்துமுள்ள மனிதன் பாபத்தால் விடுபடுகின்ருன். ஆதாரசக்கரத்தின் முடிவிலுள்ள சுழுமுனு நாடியில் சிவலிங்கம் உளது. அதை அறியவொட்டாது மறைத்து நிற்பது கிரந்திகளாகிற கதவு என்று அறிக. அக்கதவைத்திறந்தவன் பிறவித்தொடரிலிருந்து விடு படுகின்ருன். ஆதாரசக்கரத்தின் மேலிடத்தில் சந்திர சூரியர்கள் நிலைத்துள்ளனர். அங்கேயே விஸ்வநாதன் நிலைபெற்று விளங்கு கின்ருன், அவனைத் தியானிப்பவன் பரம்பொருளாகின்ருன். (32)

[தொடரும்]

## செய்தித் தொடர்.

மன்னார்குடி தாலூகா புதுக்குடி திரு நீலகண்ட கணபதி ஆலயம் இவ்வாலயத்தில் சங்கடஹர சதுர்த்திவிழா, மன்மத—மாசி 17-ம் நாள் (29–2–56) புதன் அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாலை 6-மணிக்குமேல் திருமக்-கோட்டை இராமலிங்க நிலயம் சுப்பைய அடிகள், புத்தூர் பாலசுப்பிரமணிய பிள்ளை, சங்கேந்தி குக-சதாசிவ அடிகள் ஆகிய இவர்களால் முறையே "அருட்பா" "தற்கால நிலைமையும் பக்தியும்" "கடவுட் பற்றும் தொண்டும்" என்பதுபற்றி சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன. திருமக்கோட்டை சந்தான கிருஷ்ணப் பிள்ளை கோஷ்டியாரின் நாதசுரக் கச்சேரியும் வந்திருந்த மக்களனைவரையும் மகிழ்ச்சிக்கடலுள் ஆழ்த்தின. ஷை ஆலய நிர்வாகி அரங்கசாமி அடிகள் வந்திருந்த அனைவருக்கும் அன்புடன் அன்னமளித்து உபசரித்த காட்சி மிகவும் பாராட்டத் தக்கது. சுவாமி புறப்பாடும் மிகச் சிறப்புடன் நடைபெற்றது.

காரைக்கால் சீமான் சுவாமிகள் 66-வது குருபூசைவிழா மன்மத மாசி 22-ம் நாள் (5—3—1956) திங்கள் அன்று மிகவிசேடமாக நடைபெற்றது. மாலை 6-மணிக்கு சங்கேந்தி திரு. குக. சதாசிவ அடிகளார் தலைமையில் காரைக்கால் ஸ்ரீ காந்த ராமானுஜம் அவர்கள், திருவாரூர் சோமநாதசுவாமி கோவில் டிரஸ்டி திரு. கிருஷ்ணானந்த சுவாமிகள், பழநி. திரு. சிங்காரவேல் சுவாமிகள் ஆகிய இவர்களால் முறையே "சீமான்" "குருபக்தி" "வாராநெறி" என்ற தலைப்பில் சொற்பொழிவுகள் நடைபெற்றன. துறவிகள், அன்பர்கள், ஏழைகள் ஆகிய பலருக்கும் அன்னமளித்து இவ்விழாவைச் சிறப்புற நடாத்திய ஷை மடாலயத் தலைவர் திரு. N. கோவிந்தசாமிகளவர்களின் குருபக்தி மிகவும் பாராட்டத்தக்கது.

## பெரிய புராணச் சொற்பொழிவு.

செங்கம் தாலுக்கா காஞ்சி கிராமம் கறைகண்டேசுவரர் ஆலயத்தில் மன்மத—தை 12-ம் நாள் முதல் பங்குனி 26-ம் நாள் வரை, பிற்பகல் மணி 2 முதல் 5-வரை, அறுபத்து மூவர் வரலாறும், பிறவும், காஞ்சிபுரம் வித்வான், தவத்திரு பொன்னுசாமி அடிகளாரவர்களால் ஆரணி தேவார இசைவாணர் திருமிகு மாணிக்க உடையார் அவர்கள் துணையுடன் நடைபெறுகின்றன. ஒவ்வொருநாளும் பகல் 1-மணிக்கே அன்பர்கள், அன்னையர்கள், சிறுவர் சிறுமிகள் அனைவரும் வந்து குழுமிக் குதூகலத்துடன் செவியமுதருந்திச் செல்கின்றனர். அண்மைக் கிராமங்களிலுள்ள மக்களும்வந்து கேட்டின்புறுகின்றனர். ஒலிபெருக்கியும் அமைத்துள்ளனர். இதுவரை இத்தகைய அரியசொற்பொழிவுகள் நிகழ்ந்திலவெனக் கூறலாம். காவம்கருதி இவ்வுயரிய பணியை ஏற்று நடாத்திவரும் ஊர் ஆட்சித்தலைவரும், தெய்வவழிபாட்டுச்சபை செயலாளரும் ஆகிய சைவத் திருவாளர் தொ. கோ. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் கடவுட்பற்று மிகவும் பாராட்டத்தக்கது.

சைவமும், தமிழும் தழைத்தினி தோங்குக!

REGD. No. M. 6630

---



---

அச்சுரிமை: ந. வேணுகோபாலன் ஸ்ரீ ஜயலக்ஷ்மி பிரஸ், திருவண்ணாமலை
ஆசிரியரும், வெளியிடுபவரும்: சுவாமி சொரூபானந்தா, கீழ்ப்பாலூர்.